உ

ஓம் தத் ஸத் :

இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்
பரம்பரையில் வந்த பிறைசை-ஸ்ரீ அருணாசல சுவாமிகள்
மாணாக்கர்

# ஸ்ரீமத் ஈசூர்-சச்சிதாநந்த சுவாமிகள்

## வாழ்க்கைச் சரித்திரம்



அன்னவரது நூற்றாண்டு குருபூஜையை முன்னிட்டு
மதுரை, ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகளது அத்வைத
வேதாந்த சபையாரால் ஸ்ரீ மீனம்பிகை பிரஸில்
...க்களுக்கு அன்பளிப்பாக
...க்கப்பெற்றது

...1986.

"மறந்திடின் மண்ணை மறப்பே யுடலாம்
மறக்கி லறிவை மறப்பே பிறிதாகத்
தோற்று மனர்த்தமதாஞ் சொல்வழக்கா லென்னபயன்
தோற்றளவும் வேண்டுந் துணிவு." (1)

"உள்ளச் சகத்தடிப்பை யோட்டத் தெரியாதார்
உள்ளதில தென்பதெவனென்றுறுமோ-தள்ளிவிடில்
பந்தத்தறு தியெவன் பற்றறுமோதேகோகம்
எந்தவிதத் தும்வேண்டு மிங்கு" (2)

"பூதச் சுயம்பிதெனப் பொன்றளவுங் கேட்டறியார்
ஏதுக் கிலையுண்டென் றிவ்வழக்குச்-சாதிப்பேன்
விட்டிடுமோ துன்பமயல் விட்டிடினு மிவ்வழக்கைக்
கட்டமெனி னும்வேண்டுங் காண்". (3)





ஸ்ரீமத்சச்சிதாநந்த சுவாமிகள்.



24-1

ஓம் தத் ஸத்-குரவே நம:

# ஈசூர் - சச்சிதாநந்த சுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்.

### நாடும் ஊரும்

சுருதி, ஸ்மிருதி, புராணுதிகளான சதுர்தச வித்தைகளையுடைய வைதிக பூமியாகும் இப்பரதக் கண்டம். இதன் தென்பாகத்தில் ஈடுமெடுப்புமற்ற தமிழகமுள்ளது. இஃது பல நாடுகளையுடையதேனும் அவற்றுள் மிகச் சிறப்புடையது தொண்டை வளநாடு. இஃது சான்ருேருடைத் தென்னுஞ் சிறப்பினைப் பண்டை நாளிலிருந்தே பழமொழியாகப் பெற்றுத் திகழ்கின்றது. இதிற் பலவூர்களடங்கியுள்ளன. இவற்றுள் பெருமை மிக்கவூர் ஈசூர் என்னும் திருப்பதி யாகும்.

### குலமும் பெற்ருேரும்

இத்தகைய திருப்பதியின்கண்ணே பலவகைத் தொழிலாளர்களும் தத்தம் நெறியில் வழுவாது இனிது வாழ்ந்து வந்தனர். அவர்களுள் வேட்கோவர்

மரபில் வந்த திரு. சுப்பராயப்பிள்ளை யென்பவர் சிவநேயச் செல்வராய்த் தம்மை யடுத்தார்க் குதவி யாற்றி யாண்டுள்ளார் போற்றும் நற்குணசீலராய் வாழ்ந்து வந்தார். இவரது இல்லறம் நல்லறமாய்த் திகழக் கற்புடைய செல்வி முனியம்மாள் அவர்கள் வாழ்க்கைத் துணைவியாக அமைந்தார்கள்.

## பிறப்பு

இவ்விருவரும் இல்வாழ்வில் தங்கடமை பிறழாது, வருவிருந்துவப்பவூட்டியும் தம்மாலியன்றளவு பிற வுதவிகளாற்றியும் வந்தனர். இவற்றா லவர்கள் இல்லறம் பண்பும் பயனுமுடையதாயிற்று. இப் புண்ணியப் பேற்றாலும் தமிழகத்துச் சாதன சதுட்டய மிக்குள்ள உத்தமஞான பரிபாகிகள் செய்த தவப் பேற்றாலும் வேதமுடிவான சித்தார்த்த போதக மகா வாக்கிய லட்சியார்த்தப் பொருளே திரண்டு ஒரு மானிடச் சட்டை சாத்திக்கொண்டு, அவர்க்கோராண் மகவாய் கலியுகம் 4917க்குச் சரியான யுவ ஆண்டு அவனியில் தோன்றியது. தங்கட்காண்மகவு நன் னாளில் தோன்றியதைக் கண்ட பெற்றோ ரளவற்ற மகிழ்ச்சி யெய்தினர். அவர் தம் முறவோர் கொண்ட

வுவப்பு உரைக்குந் தரமன்று. பத்துநாளுங் கழிந்த பதினோராம் நாள் உறவோர் தாய்க்கும் மகவுக்குஞ் செய்ய வேண்டிய சடங்கைச் செவ்வனே செய்து, சேய்க்குச் *சச்சிதாநந்தம்* என நாமஞ் சூட்டித் தொட்டிலிட் டகமகிழ்ந்தனர்.

*சச்சிதாநந்தரும்* வளர்பிறை போன்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மூன்றும் மாதம் பெற்றோருடன் சென்னைப் புரசைக் கடுத்த குயப்பேட்டையென வழங்கும் *சண்முக ஞான புரத்திற்கு* வந்து சேர்ந்தனர்.

## இளமைப் பருவம்

''*விளையும் பயிர் முளையிலே தெரியும்*'' என்பதற் கேற்ப அவர் வளர வளர அவருடன் *பொறுமை, அடக்கம், அன்பு, வாய்மை, பயனில பாராட்டாமை முதலிய நற்குண நற்செய்கைகளெல்லாம்* வளர-லாயின.

அக்காலத்தில் *தோப்பா பரதேசி* யென்னுமொரு மகான் சென்னையி லிருந்தனர். இவரைப் போற்றுத மக்களில்லை. இம்மகான் ஒருநாள் தம் மிருப்பிடத்தி லுள்ள திண்ணையி லுட்கார்ந்திருந்தபோது அதிகாலை

ஏறக்குறைய மூன்று மணிக்கு, 'அடுத்துள்ள குயப்பேட்டை யெனும் சண்முகஞானபுரத்தில் ஞானப்பிள்ளை அவதாரஞ் செய்துளது; போய்ப்பார்' என்று சிலர் சொல்வது போலச் சத்தத்தை உணர்ந்தார். உடனே விழித்துப்பார்த்து, ஒருவரையுங் காணாமையால் விடியுமட்டும் காத்திருந்தார். விடிந்த பின்னர், நேரே சண்முகஞானபுரம் போந்து, குழந்தை யிருக்குமிடத்தைக் கண்டுபிடித்து, அதைத் தூக்கித் தோளில் வைத்தாநந்தக் கூத்தாடி, "இக்குழந்தையால் இவ்வுலக முய்யும்" என்று கூறிச் சென்றதோடு நில்லாமல் தினஞ்சிலகாலம் பார்வை யிட்டும் வருவாராயினர்.

பாலகர் சச்சிதாநந்தர் பருவம் ஐந்து கடந்ததும் பாலர் பள்ளியில் படிக்கலானார். ஓதாதுணருமுத்தம கவிஞரேபோன்று ஆசிரியர் கூறுமுன் பாடங்களெல்லாம் பரபரப்புடன் வந்தன. அதுகண்ட ஆசிரியரும் அனைவரும் வருங்காலத்தில் சச்சிதாநந்தன் தன் பெயரை விளக்குவான்; இது திண்ணமென்றனர். இன்னணம் இவர் ஆண்டுதோறும் பல வகுப்புகள் கடந்து பலநூற்களைப் பயின்றார். தோப்பா பரதேசி

யின் சட்சு தீக்ஷையின் காரணமாகவோ தம் நற்குணச் செய்கையாலோ நற்புலமை வளர்ச்சிக்குரிய இலக்கிய இலக்கண நூற்களைக் கற்க, அப்போது சண்முக ஞானபுரத்திலிருந்த வித்துவ சிரோன்மணியான திரு. விசாகப்பெருமாளையர் தம்சோதரர் திரு. சரவணப்பெருமாளையரவர்களிடம் முறையே சங்க நூற்களையும் பஞ்ச இலக்கணங்களையும் விடாது பாடங் கேட்டனர்; கேட்ட பாடங்களைச் சிந்தித்தல் தெளிதல்களால் போற்றிப் புலவராயினுர்.

## தொழில்

கல்வி கேள்விகளால் தம் இளமைப் பருவத்தைக் கடந்த நம் சச்சிதாநந்தர் உளங்கருதி யுத்தி யோகஞ் செய்யப் பிரியங் கொண்டனர். அவர் முதன் முதலில் சென்னைக் கிறித்தவ உயர்நிலைப் பள்ளியில் தமிழ்ப் புலமை நடாத்த விண்ணப்பஞ் செய்தார். அப்போது அப்பள்ளிக்குத் தலைவராயிருந்தவர் இவரை வகுப்புத் தந்து பரிசோதிக்க, இவர்து போதனமுறை திறமையாயிருந்தது. அதனுலிவர் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தமிழாசிரியராகப் பணியாற்றி வந்தார். அன்றியும் தம்மையடுத்தவர்க்கும் இலக்கண விலக்கிய பாடங்களை போதித்து வெளியிடத்திலும் நற்பெயரைப் பெற்ருர்.

## திருமணமும் குடும்பமும்

கற்றவழி நிற்கு மாற்றலுடைய இப்பெரியாரது திருமணப் பருவத்தைக் கண்ட உறவினர்கள் இவரை யில்லறம் படுத்த முயன்றனர். அவர்களது முயற்சி பெருமை பெறச் சச்சிதாநந்த ஆசிரியரும் திருமணஞ் செய்து கொள்ள இசைந்தனர். அப்போது தம் மரபிற் சிறந்திருந்த எழிலார் செல்வி வேம்புலி அம்மை யாரைப் பெற்ருேர் மகிழ, வுற்ருேர் களிக்கச் சிறந்த முறையில் திருமணஞ் செய்து கொண்டனர். என்ரு லும் அவருக்குக் குடும்பத்திலழுந்திய வுள்ள மில்லை. அதனுலவர் சனகாதி முனிவர்களே போன்று பார்ப் பவர்க்குக் குடும்பத்தி லொட்டி யிருப்பவராகத் தோற் றிக் கொண்டிருந்தார். இவர் தாம் உபாசனு மூர்த் தமாய்க் கொண்ட சிவமுருகனைத்திரிகாலமும் உபா சித்து வந்தார்.

## ஞானகுருவைப் பெறல்

இன்னணம் சச்சிதாநந்தர் பொறி கரணங்கள் யாவும் தூய நெறியில் நிற்க, பொய்யகற்றிப் புகழ் வாழ்வு வாழ்கின்ற சமயத்தில் ஆத்ம ஞானியாம்

ஸ்ரீ-பிறைசை அருணாசல சுவாமி களைத்தம் ஞானகுரு வாகப் பெற்றார். ஸ்ரீ பிறைசை அருணாசல சுவாமிகள், சண்மத ஸ்தாபக ரென்னும் சிறப்பினையுடைய ஆதி ஸ்ரீசங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் நான்கு பீடங்களை அமைத்தார். காஞ்சியில் காமகோட்டி பீடத்தை அமைத்த பின்னர், அப்பெருமான் இந்திர பீடத்தை யேற்படுத்தினார். இது சோறுடைத் தென்னும் சோழ வளநாட்டில் காவிரியாற்றின் கரையிலுள்ள திருத்துருத்தி யென்னு மூரிலிருக்கிறது. இந்தப் பீடத்தில் பிராமண குலத்தி லவதரித்துப் பரமாம்ச சந்நியாசியாய் எழுந்தருளியிருந்து பற்பல மாணவர்களுக்கு ஞானோபதேசம் செய்தவரும், கரபாத்திர சிந்தனா வாக்கியமெனும் நூலையியற்றியவருமான ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளின் வழி வந்தவரும் சத்தப் பிரகரணம், தசகாரிய மகா வாக்கியம், சசிவன்ன போதம், ஞானவாசிட்டம், வேதாந்த சூளாமணி, கைவல்லிய முதலிய வேதாந்த நூற்களுக் குரையாசிரியருமான பிறைசை-அருணாசலம் சுவாமிகள் தாமெழுதிய ஞானவாசிட்ட நூலினுரைக்குப் பிழைதிருத்தம் செய்யவேண்டி, ஸ்ரீ ஆழ்வார் சுவாமிகளோடு சண்

முக ஞானபுரத்திலிருந்த திரு. சரவணப் பெருமாள் ஐயரிடம் வந்து அவரை யுதவும்படி கேட்டுக் கொண்டார். அதற்கவர், ''எனக்கு நேரமில்லை; ஆனால் என்னிடத்தில் வாசித்து வித்துவத் தன்மையை யடைந்த சச்சிதாநந்தம் இருக்கிறார். அவரிடத்தில் பிழைதிருத்தம் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிச் சிபார்சும் செய்தார். ஞானவாசிட்ட ஞான நூலைப் பிழை பார்த்து வந்த திரு. சச்சிதாநந்தரும் பிறைசை-ஸ்ரீலஸ்ரீ அருணாசல சுவாமியை ஞானாசிரியைராகக் கொண்டார்.

## ஆத்ம ஞான மறிதல் அனுபவங் கோடல்

கொண்ட நம் சச்சிதாநந்தர் குருவுக்கு ஆப்த மங்கம் தானம் சற்பாவ மென்னும் நால்வகைப் பணிகளாற்றியவரதன்பினைப் பெற்றார். குருவும் நித்தியாநித்திய வஸ்துவிவேகம் முதலிய சாதன சதுட்டயங்களையும் ஆத்மஞான நூற்களையும் உபநிடதங்களையும் சதுர்வித வேத வாக்கிய லட்சியார்த்தங்களையும் அவர்க்குப் போதித்து வேதத்தின் உபதேச வாக்கியத்தையும் உபதேசித்தார். ஸ்ரீ சச்சிதாநந்தரும் சிரவணமநந நிதித்தியாசனம் புரிந்து, அபரோக்ஷ சாட்சாத்

கார நிலையைப் பெற்று, பாஹிய திருட்டியின்றிச்சதா அந்தர் முகதிருட்டியுள்ளவராய்ச் சித்திரதீபம் போல வும், சித்திரப் பதுமைப்போலவும் நிர்விகற்ப சகஜ நிஷ்டானுபவ நிரதிசயாநந்த வாழ்விலிருந்து ததா காரமாக விளங்கினுர். அவ்வப்போது தாமியற்றி வந்த திருப்பணிகளால் குருவினது பூரண அருளையும் பெற்றுப்பெருமையாய்த் திகழ்ந்தார்.

## இந்திரபீட குருவாதல்

தம் மாத்ம குருவான ஸ்ரீலஸ்ரீ பிறைசை அருணு சல் சுவாமிகள் தாமெழுந்தருளி யாவர்க்கும் ஞானோ பதேசம் செய்து, தமக்குக் கிடைத்த மடத்தை மாணவ மணியான ஸ்ரீ சச்சிதாநந்தர் வசம் பிரசங்கஞ் செய்யு மாறு விடுத்துத் தமது ஜனன வூரையடைந்து. கி.பி. 1866-ஆம் ஆண்டு ஆத்ம நிலையை யெய்தினுர். அவரளித்துச் சென்ற இந்திட பீடத்தில் நந்தம் ஈதூர் சச்சிதாநந்த சுவாமிகளெழுந்தருளி, அத்துவித மத போதகாசிரியர்ராய்ப் பல நூற்களைப் பல பேர்க்குப் போதித்து வருவாராயினர். இவர் அபரோக்ஷ ஞானு னந்த சுவாநுபூதியினைத் தாமனுபவிப்பதோடு, தம்மை யடுத்த சாதன சதுட்டயமுள்ள முமூட்க்சுகளது அஞ்-

ஞானந்தகாரத்தை நீக்குதற் கொரு ஞானசூரியராயும் நின்று, நியாயம், சோதனை பொருத்தமுற வேதாந்த பிரசங்கம் புரிந்து, சந்தேகங்களை யெல்லா மொழித்து வந்தார். அக்காலத்தில் இவரைப் பார்ப்பவ ரெல் லாரும் ''*பிரம்மம் போகிறது; பிரம்மம் போகிறது*'' என்று சொல்லுவார்கள் என்றால், இவர் கலங்கா நிலைமையுள்ள சித்தத்தைப் பெற்றவ ரென்று தற்சொரூபத்திலேயே யழுந்தி விளங்கினாரென்றுந் தெரிகின்றது.

இவரது சொற்பொழிவு சென்னையின் நாலா பக்கங்களிலும் பரவி யிராசதானியையே சூழ்ந்து கொண்டது. இதனால், வருந்திய பிற கொள்கையினர் கிறித்தவருள்பட இவரை யண்மித் தம் மதச் சித்தாந் தப்படி வினவினர். வினவியவற்றுக்குத் தகுந்தவிடை களைத் தந்ததன்றி, நம் சச்சிதாநந்த ரவர்களை விடை யிறுக்குமாறு சில வினாக்களையும் விடுத்தனர். விடை யிறுக்க முடியாதவர்கள் பணிந்து சென்றார்கள்.

தகுதிவாய்ந்து தம்மையடுத்த பேர்கட்கெல்லாம் இந்திரபீடக் குரு சச்சிதானந்த சுவாமிகள் மகாவாக்கிய ஞானோபதேசம் புரிந்து பகிர்முக திருஷ்டியை

நிவர்த்தித்து அந்தர்முக திருஷ்டியுள்ளவர் களாக்குவித்து, நிர்விகற்ப ஞானானந்த வாரிதியில் மூழ்கச் செய்தனர். இவர்க்கு மாணாக்கரானோர் பல்லோராயினும் இன்று புலப்பட சமாதியா யிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீகள் சுவாமி வேங்கடசுப்பாநந்தா, கூப்பர் முனிசாமி, புவனகிரி மலையாளத்து சுவாமி, சாது ரத்தின சற்குரு பெரியோன், தண்டறை சுப்பராய சுவாமி, ஐயாக்கண்ணு சுபேதரர், ஒற்றியூர் ஞானாசிரியர் ஆறுமுக சுவாமிகள், பவழத்தங்கவேலையர் ஆகிய இவர்களே.

## நூலியற்றல்

இவ்விதம் ஞானப்பிரசங்கம்செய்கையில் துவிதபேத வாதத்தைப் பூர்வபட்சஞ்செய்து அத்துவித அபேத வாதத்தைச் சித்தாந்தஞ் செய்யுமாறு தர்க்கம்புரிய நேரும் சமயத்தும், தாம் தமது அந்தர் முக திருக்காகார நிலையிற் பிறழாது நின்று பேசுவதல்லது, பகிர்முகதிருசிய ஆகாரப் பிறழ்ச்சியினின்று பேசுதலின்று.இவர் செய்யும்ஞானப்பிரசங்கத்தோடுஅப்போதைக்கப்போது தமது சகஜ ஞானநிட்டையிலுதித்த சுவாநுபவங்களையும் ''ஏகமேவாத்வைதம்'' என்னும் சுருதி வாக்கியத்துக்கு மாறுபடும் அஞ்ஞான காரிய

மாயும் துக்ககாரிமாயு முள்ள துவிதபேதங்களை நிரா கரித் தலையும் அமைத்து, *திருக்த திரிசிய விவேகம், பிரத்தியக்ஷாநுபூதி விளக்கம், எதார்த்தவாதம், வேதாந்த இலக்கணம், உத்தமவாதம், ஜீவகாருணிய சுவானுபூதி விளக்கம்* ஆகிய நூற்களை யியற்றி யிவ்வுலகமுய்ய வழங்கினர். அன்றியுமிவர் *கைவல்லிய நவநீதம், வேதாந்த சூளாமணி, சசிவன்ன போதம், பிரபுலிங்கலீலை, சொரூபசாரம், உபநிடதம்,* * பகவத்கீதையாகிய இந்நூற்களுக்குப் பெருமையான வுரையியற்றிப் பெருமையுற்ருர்.

## அருங்குணங்கள்

தமது கிருகத்திலேனும் வேறு எவ்விடத்திலே னும் வேதாந்த நூலுணர்ச்சியில்லாதவரிடத்திற் பேச இவர் மிக அருவருப்புடையரா யிருந்தனர். தக்க பரி பாகிகளேனும் ஞானநுபூதியுடையவரேனும் நேரிட்டு விட்டாலோ அவருள்ள முவக்குமாறு நியாயத் தாலும் பரீட்சையினுலும் பொருத்தத்தினுலும் கடல்போன்ற தமது துரியாதீத சுவாநுபவங்களை யெடுத்துச் சொரிந்து பிரமாநந்த சமுத்திரத்தில் அவரை மூழ்கச்

செய்வார். அத்துவைதத்திற்குத் துவைதம் சாதக மெனக்கூருது, அதுவே சித்தாந்தமெனக் கூறுதலைக் கேட்ட லிவர்க்குக் கர்நகடூரமாயிருக்கும். இலவுகீக மான வார்த்தைகளைப் பேசுங்காலத்தும் மற்ற இலவு கீக சந்தர்ப்பத்தும் அந்தர்முக திருட்டியிலேயே நின்று வியவகாரஞ் செய்வார். இவரெப்போது ஞாயம், சோதனை, பொருத்தம் இவற்றிற்கியையப் பிரபல சுருதி சம்பந்தமான அத்வைத விசாரம் செய்வதே யன்றி, அற்பசுருதி சம்பந்தமான கர்மமாதிகளைப் பற்றி விசாரஞ் செய்வதேயில்லை. சமயம் நேரிட்ட போது பிரபல சுருதி விசாரத்துக்குரிய முமூட்சுக்களின் முன்னர் அவைகளை மறுத்தும் சொற்பொழி வாற்று வர். இதனுல், சத்தாதி விடய ஆகாரத்தில் பிரியப் படும் பரிபாகிக ளல்லாத அமுமூட்சுக்களிற் சிலர் வெறுப்புற்று இவரை யிகழ்ந்து வந்தனர். இதைப் பற்றி யார் என்ன இகழ்ந்தாலும் என்ன புகழ்ந்தாலும் இவர் பொருட்படுத்துவதில்லை. இவர் தாம் செய் தொழிலால் ஈட்டிய அசையும் அசையாத பொருள் களையெல்லாம் தம்முபாசனு மூர்த்த மாயமைந்த சண்முகஞானபுரத்தில் கோயில்கொண்டுள்ள கந்தப்

பெருமானுக்கு நித்திய பூசைக்கெழுதியுள்ளார். சுருங்கக் கூறின் இவர் காலத்திலிருந்தவருள் மிகச் சிறந்தவரான ஸ்ரீமத் இராமலிங்க அடிகள், இவரைப் பாராட்டியுள்ளாரெனின் இவர், குணம் மிகப் பாராட்டத்தக்கதாம்.

## விதேகமுத்தி கைவல்லியம்

இவ்வாறு இம்மகான் ஏறக்குறைய முப்பதாண்டு வரையில் வேதாந்தச் சொற்பொழிவுகளைப் புரிந்து, யாவருள்ளமுமுள்ளுமாறு புகழொடு விளங்கியிருந் தார். இனித் தமதுடனில்லாது விதேகமுத்தியடையுங் காலஞ் சமீபித்த தென வுணர்ந்து, பார்த்திப வாண்டு கார்த்திகைத் திங்களாதி வாரமொன்றில் வழக்கம் போலச் சொற்பொழிவாற்றி முடிந்தவுடன் ஆண்டு கூடியிருந்த மாணுக்கர்களை மிகக்கருணையுடனேக்கி, "நீவிரெல்லீரும் அடுத்த தையாண்டு தைபூசத்துக்குள் ளாக இடைவிடாது போந்து, இன்னுந் தெரிந்து கோடற்கியைந்த அரிய விரகசியங்களை யையந்திரி பறத் தெரிந்து கொள்ளுங்கள்" என்றுணை யிட்டருளி ஞர். அன்று தொடங்கி, இடைநடுவில் பாக்கியா யிருந்த சில மாணுக்கர்களுக்கும் ஞானேபதேசம்

செய்து, சத்சிதானந்த சிவோகத்தி லமர்ந்திருந்தார். அப்போதவரை யண்மியிருந்த மாணவர்கள் இவரை நோக்கி, ''தேவரீர் விடுக்கு முடலை யெங்கு வைக்க உத்தரவு?'' என வுசாவினார்கள். அதற்கவர் ''மலத்தை யெங்கு வைப்பீர்கள்?'' என்றெதிர் வினவி யாண்டுப் போடும்படி கூறினார். அன்றியும் இம் மகானது உடலைச் சீடர்கள் போட்டோ எடுக்கும் போது இவ்வுடல் நானல்லவே என்றும், இந்த உடலையா நானென்று உங்களுக்குப் போதித்தேன் என்றும், எதார்த்த நானைக்கண்டு போட்டோ எடுத்து கொள்ளுங்களென்றுங் கூறினார். தான் எழுதிய திருக்கு திருசிய விவேக நூற்கு முதற்பக்கத்தில் (டைட்டில் பேஜில்) தம்பெயர்முன் சுவாமிகள் என்று அச்சடித்துக்காண்பிக்கும்போது இவ்வுடல் சுவாமியா என்று கூறி சுவாமிகள்என்னும் பட்டத்தை அகற்றிவிட்டுஷை முதற்பக்கத்தில் சச்சிதானந்தப் பிள்ளையென்றே போடுமாறு கட்டளை யிட்டனராம். மேலேகுறிப் பிட்ட நாட்களுக்குள் தனியே அபரோக்ஷ சாக்ஷாத்காரமான பரிபூரண சீவன் முத்தியிலிருந்து ஆங்கிலம் 1886ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 21-ம் நாளுக்குச் சரியான

பார்த்திப வாண்டு தைத்திங்கள் 10ம் நாள் குருவாரம் இரவு 10-மணிக்கு ஆயில்லிய நட்சத்திரம் கூடிய நேரத்தில் பிராரத்துவ அந்தியதநுவை விட்டுத்துரி யாதீத விதேக கைவல்லிய முத்தியடைந்து பரிபூரண பிரம்ம சொரூபரானார்.

[**இம்மகானது திருமேனி, இவர் வாசம் செய்திருந்த சென்னை, புரசைக் கடுத்தசண்முக ஞானபுரம் கந்தசாமிகோயிலுக்குத் தானமாயளித் துள்ள இல்லத்தின் பின்பக்கத்திலேயே சமாதி செய்யப்பட்டுள்ளது.** அச்சமாதிக்கு நித்திய நை மித்திய பூஜைகள் சிறப்பாக நடந்து வருகின்றன. இம்மகான் இல்லறத்திலிருந்து உள்ளத் துறவறம் பெற்று முத்திபெற்றவர்.]

**சுபம் சுபம் சுபம்**

**திருத்துருத்தி இந்திரபீடம்**
வேதாந்த பிரசங்க மாமேகம்.
**ஸ்ரீலஸ்ரீ ரா. சுப்பிரமணிய ஆச்சாரியார்**
மாணவர் இந்திரபீடம்
**புலவர் வே. த. அர்ச்சுனனார்,**

உ

பரப்பிரம்மணே நம :

# சுவாநுபூதி விநோத விளக்கம்.



## கடவுள் வணக்கம்

சிதம்பர மன்றிப் பதிபசு பாசஞ் சிறிதுமில்லை
சிதம்பர மாக முடிவதென் றாய்தலில் தேர்ந்தவர்க்குச்,
சிதம்பர மன்றி யிடமே தெமக்குள சிந்தனைக்குச்,
சிதம்பர மேபர தெய்வந் துணையெனத் தேர்ந்தனமே.

## குரு வணக்கம்.

ஆய்தலில் தேர்ந்த தறிவன்றே நீயதுகாண்
ஓய்விடம் வேறன் றுணர்த்தினான் — மாய்வில்
பிறசையரு ணைசலப்பேர்ப் பெம்மான் குரவன்
நறைமலர்த்தா ளென்மகுடநாடு.

---

# நான்மணிமாலை.

*வெண்பா.*

வெளிநாட்டத் தெங்கே விபரீதம் போல
ஒளிநாட்டத்தெங்கே யுலகம் — ஒளித்ததெனில்
ஆதார நாட்டத் தவலமாப் போவதெவன்
ஆதேய மெல்லா மகன்று. (1)

*கட்டளைக்கலித்துறை.*

அகன்றனவாகி லகலாது காண்பதென் னக்கணத்தில்
அகன்றவ ணிற்றலு மில்லாமை யாலன் றகன்றதெஃ
தகன்றது நம்மய லல்ல வுலக மஃதெங்ஙனம்
அகன்ற மயலன்றி யெங்கே யுலகுள் தாயுமினே. (2)

*விருத்தம்.*

ஆய்ந்திடி லுலக மணுக்குழுவாகவஃதொருமுதலெனக்
கொளலென்
ஆய்ந்திடா முனரே லாய்ந்திடி லெங்கே யவ்விரு
தர்மமு மெதன்பால்
தோய்ந்திடல்கடமேல் தோற்றமதாகுஞ்சுயம்பெனின்
மண்ணன்றி யெங்கே
ஓய்ந்தது வாதம் நம்மயலன்றி யுலகுள் தென்லெவ
ணிலையே. (3)

## அகவல்.

இலையுல கென்னி லிருப்ப தறிவே
பலகலை சம்மதம் பார்த்து மறியார்
எவரெவர் நாட்ட மெவ்வண மவ்வணம்
அவரவர்க் கிலகு மதுவது வாகத்
தெரிவென்ல் பெரியோர் தேர்ந்த வறிஞர்
முரணிதி லென்கொலோ முழுது முணர்ந்தும்
ஏலா திருத்த லெவரு மறிகிலம்
மாலா யுழல் மகிழ்ந்தனர் பலரும்
சமய நிச்சயந் தலைகா லொருங்கெங்
கமையக் கண்டன ராரு மிலையே
பலபல வாகப் படித்தீர்
கலக மிலாநிலை கண்டவெந் நிலையே. (4)

## வெண்பா.

நிலையெது வென்னி னிறைந்த வறிவே
இலையொன்றும் வேறு யிருந்தும்-இலையென்னும்
பட்டமே கோடலெவன் பார்த்துணர்ந்திங் காயுங்
கால்
விட்டிதனைக் கொண்மின் விரைந்து. (5)

### கட்டளைக்கலித்துறை.

விரைந்துடல்வீழ்முன் விசாரந்தலைக் கொளல் வேண்டுமென்றே
நிரந்தரங்கொள்ளி லறிவொன்றுமேமிஞ்சி நிற்கு மெனல்
தெரிந்ததுவாக விளங்கத்தெரிந்தனந் தேசிகனால்
மருந்தொன்றிலைமயல் மாற்றவிதுவே மருந்துய்ம் மினே. (6)

### விருத்தம்.

உய்வதற்கனேக வுறுதிகளிருந்து முளதுலகென்பதை யகற்று [தொன்றே
பொய்யைப்பொய்யென்றும் மெய்யைமெய்யென்றும் புகலும்வேதாந்தம
மெய்யெது வென்னி லறிவெனலொன்றே வேறெலா மன்றெனும் வேதம்
அய்யமொன்றுளதே லாய்ந்திடவம்மி னகற்றுது மன்னதிக் கணமே. (7)

### அகவல்

இக்கண மக்கண மிலையறி வன்றி
எக்கண மேனு மிலாதெவ னென்றிலொன்
றந்தந் தவசரத் தறிவென லின்றேல்
எந்தெந்த வாறங் கிலகு மதுவது

அறிவினைத் தள்ளி யணுவினைத் தெரிக்கில்
பிறிதே கால பேத மனைத்தும்
காட்ட வகையிலீர் கற்றுமென் னனைத்தும்
நாட்டச் சமைய நன்குணர்ந் தீரோ
பேதமை பேதமை பெரிதும்
ஈதறிந் துய்ம்மி னிரும்புல வோரே. (8)

*வெண்பா.*

புலமையாம் வேண்டிடுதல் போதமே தானய்
இலகிடுதற் கன்றி யிலையாம்—அலவென்னில்
தானலதைத் தானெனற்காஞ் சற்றுந் துயரகலா
மானிடரென் றெங்கே வகை. (9)

*கட்டளைக்கலித்துறை.*

வகையறிந் தென்பய னேட்டாலறிவின் மலமறுமோ
சுகமேயறிவிங் கறிவேசுகமெனல் சொல்லளவாம்
இகமுத்திரமென லெங்கேயறுநினைப் பின்மையொடு
புகவிருண்ஞானத் தினகரன்ருேன்றிடிற் போய்
விடுமே. (10)

விருத்தம்.

போய்விடுமெனலும் வந்ததிங்கெனலும் புகல்மொழி
மாத்திர மன்றி
யாய்ந்திடில் மயலோர் முதலலாமையினு லன்னது
வேறெனு ரறிஞர்
ஒய்ந்திடக்கனவு விழித்திடிலெங்கே யுலகுயிர்பரமெனு
மூன்றுந்
தோய்ந்தசின்மயத்தி லிஃதெனக்காணுத் துணிபினைச்
சொலவறிந் திலனே (11)

அகவல்.

அறிந்தில னெவையு மனுமவத் தென்றல்
அறிந்திலா முனமு மறிவன்றி யில்லை
யென்ன வேண்டுமோ வெதன்பிழை யென்னில்
உன்னிடாக் குற்றமே யுறுதிவே றின்றிப்
பகுதி விகுதி பார்க்கி லிரண்டாம்
பகுதி மறதி பகருடல் விகுதி
இங்ஙன மாத லிலகு மறிவே
எங்ஙன மென்னி லிவ்விரண்டாக
அன்னிய முளதே லவையிலா தெவன்கொல்
அன்னியோன் னியத்தி லறிவன்றி யந்தோ
எந்த வகையினு மில்லை
இந்த நிலையை யெடுத்திடும் பகுப்பே. (12)

## வெண்பா.

பகுதி மறதியெனல் பாங்கா விளக்கில்
விகுதி யுடலென்னல் வேண்டா — சகத்துடன்
காண்
என்னில் விகார மெவையுமஃ தின்றென்னில்
அன்னதே யாதியென லாம். (13)

## கட்டளைக்கலித்துறை.

ஆமென் றலவென் றறிவ தறிவன்றி
யாதியுண்டோ
ஆமென் றலவென்று தன்னைக் கணுக்கவு
மாகுமன்றே
ஆமென்ற தேதிங் கலவென்ற தேதிவ் வறிவை
யன்றி
ஆமென்ற தேயல வாக முடிதலி ஞயுமினே. (14)

## விருத்தம்.

மின்னெனக்காணு முடலினையெவரு மெய்யெனக்
கண்டு நானென்பர்
அன்னியமன்றே லெனதெனப்படுமோ வழியுமோ
வனர்த்தம தாமோ
இன்னதென்றுறக்கத் திலாவகையாமோ வெவர்
மரணந்தனை யகன்றார்
உன்னிடிற்பிறப்பு மிறப்புமேதுணர்வுக்
குடற்கெனலூகம தாமே. (15)

### அகவல்

ஊக மிருந்து முணர்ந்திடா தென்னே
தேக மிதுவெனத் தேகி யிதுவென
மானிட ராகியு மயக்கெங் ககன்றூர்
ஈன மிருக மிவரெனற் கிடரென்
தன்னை யுணர்ந்தோர் தாமே மானிடர்
அன்னிய மெல்லா மறிவுரு வாக
என்ன தனுபவ மிதுவே
என்னவென் றுரைப்பே னிதின்மகி
மையையே. (16)

### வெண்பா.

மகிமை யுருவத்தில் மாற்றி மினுக்கி
அகமகிழ்ந் திந்நா ளழிந்தேன்—சுகநிலையைக்
கண்டேன் குருவருளாற் காணே னயலொன்றும்
அண்டா துறைமனமு மாங்கு. (17)

### கட்டளைக்கலித்துறை.

ஆங்கேயறிவொன்று மிஞ்சிவிளங்கலென் னுச்சரியம்
ஈங்கேவிகார வடிவேமயமா யிருப்பதென்னே
ஓங்கியதானெங் ஙனமங்ஙனமென வோதினன்காண்
பாங்கறிந்தேன்மரு ளேன்வெருளேனினிப்
பார்த்துய்ம்மினே. (18)

## விருத்தம்

பார்வைதனக்குல கன்றியெவர்க்கும்
பகருமில்க்குளதோ
தீர்விதுவென்னி லிலாவகையென்ஞே
திரியுமுறக்கமதில்
பார்வையதின்றெனி லங்குளகாட்சி பகல்போற்
றெரிவானேன்
ஓர்தலிறந்தீ ருணர்வேமயமென
லுன்னுமினுத்தமரே. (19)

## அகவல்.

உத்தம மத்திம மொழிந்த ததமம்
உத்தமர்க் குலக முணர்வா விளங்கும்
மத்திமர்க் கைய மயமா முலகம்
சத்தெனக் காணுந் தகைய ததமர்க்
கிப்படி காணி லெதுவோ வுலகம்
அப்படி யப்படி யாகு மென்னில்
எங்ஙன மிலக்கி லிருப்ப தென்னில்
அங்ஙன மங்ஙன மாகியு மாகா
திருப்ப தியல்பே யெமதுரு
இருப்ப தப்படி யெமது முடிவே. (20)

## வெண்பா.

முடிவென்னில் வாதமோ மோனமோ சிந்தை
முடிவோ மறையோ முதலோ — தடையின்றிக்
கூறுக வென்னிற் குணங்குறிக ளென்றுணர்க
ஈறுமுத லில்லாத தில். (21)

## கட்டளைக்கலித்துறை.

இல்லையுண்டென்பதென் ஞேபரமாயதை யின்ன தெனச்
சொல்லவுமெண்ணவு மின்மையிலின்றெனச் சொல் வதுகாண்
இல்லையென்ரேர்தலு மின்ரேவுளதென் றிசைக்கு மறை
எல்லையிலிவ்வழக் கெங்கேயறிஞருக் கெண்ணுமினே. (22)

## விருத்தம்.

எண்ணமொன்றின்றி யுடலநாளுக விருக்குதலோவய லாக
உண்ணினைந்தயர்ந்து தீர்வகையின்றி யுயர்பரமகற்று மென் றெனலோ
தண்ணருள்சுரக்கில் முயற்சியென் செய்யுந்தடை யிலை யென்றகங்கொளலோ
எண்ணிடுமுத்தி யெவையுநாளுக விலகுதலென்னுமா மறையே. (23)

## அகவல்.

மறையென லிந்து மறையே மறையாம்
பிறமயக் ககற்ருப் பிரேத மறையே
பகுதி விகுதி பகுப்பையொன் ருக்குந்
தகுதி யிலாமையில் தவிர்ந்தன மவற்றை
இந்து மறையிலு மிலாதென் ஞெருமை
இந்த பேத மிசைத்தகற் றுதற்கே
பருவத் தளவாப் பகர்ந்தழைத் துப்போய்
இருமைய தொருமைய தாக்கித் தணிக்கச்
செயுமிதின் மகிமை செப்ப
வியையா தெவர்க்கு மிதுதிண் ணமதே. (24)

## வெண்பா.

திண்ண மிதனைத் தெரிக்கா விடிற்குரவன்
சண்முகி யாதிகுறி தாஞகும்—உண்மையதேல்
தேக வளவினதோ தேவநிலை யென்னமதி
ஊகத்துக் கொன்ரு துறில். (25)

## கட்டளைக்கலித்துறை.

உறுதியொன்றில்லை யுணர்வினைத்தள்ளி லொரு பொழுதும்
மறதியொன்றேயனர்த் தத்துக்கிடமெனல் வாய்மை யன்ரே

இறுதி மட்டாய்ந்திடி லெல்லாமறதி யெனக்குறிக் கும்
அறுதற்கிடமிலை ஞானமல்லாதிதை யாயுமினே. (26)

விருத்தம்.

ஆயுமவர்க்கே யலதிதுகாணு தனந்ததவர்க்கெனினும்
மீயுயர்சடகோபப்பெரு மாடன்—விமலமொழித்திறமீ
தோயுனர்யாரோவிருத்திக ளவரே யுயர்பதமடை வார்கள்
நீயுநானெனலுமுபாதிகள் மட்டே நீக்கில்சிதம்பரமே. (27)

அகவல்.

சிதம்பரத் தலமோ சிதம்பரக் குறியாம்
சிதம்பர மென்னல் திரியாச் சுயம்பு
மற்றவை யெல்லா மாரு தொன்றிலை
இற்றதென் றுணரா விரும்பொரு ளதுவே
மேல்கீ ழொப்பிவை மேவிடா ததனல்
சால்புடைத் தாகத் தயங்கா விடமிலை
கற்பித மின்றிய காட்சி
அற்புத மிதுபோ லதிசய மிலையே. (28)

## வெண்பா.

இலையெனலை யேலா திருப்பதா வொன்றும்
மலைவின்றி யாருணர்த்த வல்லார்—இலையோ
குருவெனற்குப் பஞ்சமிலை கூறற் கறியார்
பெருருவஞ்ச கங்கரந்த பேர். (28)

## கட்டளைக்கலித்துறை.

பேராயிரங்கற்றுப் பேசியுமெட்டார் பிணக்கறுக்கார்
நேரேயிருக்கு முலகையென்றுலிவர் நின்றெவர்க்குந்
தீரர்வழக்கைத் தொலைத்துப்பரத்தைத் தெரிசிப்பரோ
தேராவிவ்ரை விடுத்துக்குருபரன் தேடுமினே. (29)

## விருத்தம்.

தேடிடுந்தன்னைத் தவிர்ந்தயல்பரமாத் தேடிடிற்
றேற்றுமற் புதங்கள்
நாடிடிற்றனது சுத்தகற்பிதமே நண்ணுமுன்னசுத்த
கற் பிதங்கள்
கூடுமேற்றன்து மயல்புறம்பென்னக் கூடுமேயவை
தெளி வயலாக்
கூடிடாதெனிற்று ஞரென்த்தேடிக் குன்றவர்விருப்பர்
ஞானியரே. (31)

அகவல்.

ஞான மௌனலே நாடிடுங் காலே
தானே காரணந் தானே காரிய
மாகுத லெதுவோ வதுவே ஞானம்
ஏக மேவாத் துவித மென்பம்
ஞான மலதஞ் ஞான முளதேல்
ஈன மேக மேவாத் துவிதம்
என்ன வருமே லினியொன்று சொல்லுதும்
அன்னதுண் டிலேயென் றறைதரு தகைமை
யேலா தொருபொரு ளின்னதென் றிசைக்கின்
தோலாது நும்மொழி சொல்வா தத்தால்
யாது பயனோ விலேயே
ஓதி யுணர்மி னுண்மை நிலேயே. (32)

வெண்பா.

உண்மை யலவே யுயர்ஞானம் போல்பவைகள்
உண்மையென் றேனேயவையுற்றுலும் — கண்
புதைந்த
மாந்த ருவப்பர் மதியா ருயர்ஞானி
சாந்தனேயுங் கண்டிடினுந் தான். (33)

## கட்டளைக்கலித்துறை.

தானெனலில்லாத் திணையிலையுண்டேல் சதுமறைகள்
தானெனபதேமுக் கியமென்னுமோவிதைச் சற்று முன்னீர்
தானெனல்முவிட மைம்பாலிருதிணைச் சார்ந்துமல
தானெனல் கண்டவ ரன்றோ வெவற்றினுஞ் சத்தியரே. (34)

## விருத்தம்.

சத்தியமென்பர் சகபரமுயிரைத் தன்சுயவடிவினைக் காணார்
மெத்தவாசித்து மென்பயன்செருக்கே மேவிடற்கிட மலா துண்டோ
எத்தனைபிறப்பி லிஃதொரு பிறப்பா மிதனைநானென் னுமவ் வளவும்
முத்தியேயில்லை யுளதெனின்மயக்க முடிந்ததன்றென் பர்ஞானிகளே (35)

## அகவல்.

ஞானமு திக்கி னசிக்கு மயக்கம்
ஏனைய வற்ரு லெங்ஙன மசையும்
மயக்க மென்னல் மதிமயக் கேனைய
மயக்க மன்று மதிமயக் காவது

ஒன்றையொன் ருக வுன்னி லதுவே
ஒன்றுவொன் ருக வுறுமே யெதிரில்
இன்னதென் றைய மிகந்து
தன்னுரு கண்டு தான்விளங் குவரே. (36)

வெண்பா.

விளக்க மிரண்டாம் விடயமொடு ஞானம்
துளக்கறுத்தல் மெய்ஞ்ஞானச் சோதி— அளக்க
லிலா
மெய்ப்பரம தீதே மிகப்படித்தும் வேறென்பர்
பொய்ச்சகத்தை மெய்யென்பர் போய். (37)

கட்டளைக்கலித்துறை

போய்நெடுந்தூரமும் பாழன்றிக்காணர் புவியனைத்
துஞ்
சேய்மனையாதிய சுற்றமுமெய்யெனச் சிந்தைசெய்து
ஒய்விலதாகச் சுகதுக்கமெய்தி யுழலுவதென்
போய்நற்குருபரன் ருள்பற்றிவாழுமின்
போதகரே. (38)

விருத்தம்.

போதகரென்பீர் போதமீதென்னப் புகலவுங்கேட்டுநீ
ரறியீர்
யாதுமெவ்வணுவி னிதமுதித்தொடுங்கும் யானெனல்
யாதுயிர் பலவும்

ஓதிநன்குணரி லறிவலாதின்றென் றுணர்த்துவதன்றி
யென் னுணர்த்தும்
நீதிசோதனையால் தீர்விதுவாகு நிலையெனச்சொல்வர்
ஞானிகளே. (39)

*அகவல்.*

ஞானமே சரியை ஞானமே கிரியை
ஞானமே யோகம் ஞானமே ஞானம்
வேறெனின் ஞாயம் வேறெனற் கென்னை
வேறுவே ருதலின் வேறெனப் படுமெனின்
அறிவினைத் தள்ளி யவைநான் கெங்கே
அறிவவை யாயி னயலாத் தோற்றலென்
கான னீர்போற் காணுமென் றுணர்த்தற்
கீனமில் சுருதி யிருப்ப தறியீர்
எடுக்குந் துறையி லிணக்கங் காட்டி
முடித்தொன் ருக்கின் முடிவிதென் றனர்காண்
*அதாஅன்று*—ஒன்றெனப் படுதலு மன்றெனப்
படுதலும்
நற்றெனத் தீதென நாட்டப் படுதலும்
இன்ன தென்று மீதல தென்றும்
பன்னப் படுதலும் பன்னங் படாதலும்

உண்டென் றிலையென் றுணர்த்தப்படுதலும்
பண்டையதென்றும் பழையதன்றென்றும்
இன்னவாறெல்லா மிசைக்கப்படுதலும்
அன்னியமுன்னிய மாக்கப்படுதலும்
ஏற்றற்குரிய திரும்பொருளொன்றுண்
டேற்றமில்லாதார்க் குரியதன்று
தக்கசிரவணந் தக்கமனனம்
மிக்கவிடத்தே மிகுமேதெளிவு
இதுமிகத்தனிக்க வியையுமக்கணம்
இதுவதுவென்னு விரும்பொருடோன்றும்
இம்முறையல்லார்க் கிலகாதிலகா
தம்மவம்ம வதிசயமிதுபோல்
இல்லையில்லை யிதனையுணர்ந்தார்
நல்லரேயல்லார் நல்லர்போற்காண்பர்
ஆரவர்நலரெனி லறிந்தவளவு
தேரச் சொல்லுதுஞ் சிறந்தசங்கரா
சாரியவர்தண் சரணமடைந்தோர்
ஓரியல்பாக வொளிர்சடகோபர்
அன்னவர் தம்மடி யகலாவடியவர்
முன்னுமையவள்பால் முகந்தருந்தியசம்

மந்தரொடுநால்வர் மலரடியகலார்
இந்தபரம்பரைக் குரியர்கல்லால்
நிழற்கட்டெளிந்தார் நினைவுசின்மாத்திர
நிழலையகலா நிமலதேசிகர்
முதலியோர்பதத்தை முடிமிசைதரித்து
மதமெலாமுறிய மாற்றியமுனிவர்
சரணேயெமது தலைக்குப்
பெருமுடிவேறே பெறுமுடியிலையே. (40)

## 15 ~~105~~-வது, தனது சுவானுபூதி விநோதவிளக்கம்.

முற்றிற்று.

---

## ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள் ஆதீன வழிமுறை

வந்த மாணவர்கள்

1. தத்தாத்திரேய சுவாமிகள்
2. செங்கமல சுவாமிகள்
3. முத்தைய சுவாமிகள்
4. சுப்பிரமணிய சுவாமிகள்
5. ந[illegible]த-அருணசல சுவாமிகள்
6. பி[illegible]-அருணசல சுவாமிகள்
7. [illegible]ச்சிதானந்த சுவாமிகள்







உ



திருத்துருத்தி இந்திரபீடம்

கரபாத்திர சுவாமிகள் பரம்பரையில் வந்த

### ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகள்

மதுரை

# 103-வது அறிவு

## இரட்டைக்குறள் வெண் செந்துறை

போகாத மாயையைப் போக்கிட லாவதும்
    புண்ணிய பாவம் புறத்திட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
    மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (1)

என்னிலே யாவையுங் கண்டிட லாவதும்
    யாவையு ளென்னையுங் கண்டிட லாவது
மன்னியங் கண்டிலோ மென்றிட லாவது.
    மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (2)

மோகாதி யெல்லா முறித்திட லாவது
    முற்றுமுற் கன்மங்க ளற்றிட லாவது
மாகா தழியா திருந்திட லாவது
    மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (3)

இந்தப் பிறப்பினின் றேறிட லாவது
    மேகாந்த மாகி யிருந்திட லாவது
மந்தக் கரண மறுத்திட லாவது
    மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (4)

நற்செய் தவங்களு மற்றிட லாவது
    நானெனு மாங்கார நச்சற லாவது
மற்சனை யெல்லா மறவிட லாவது
    மறிவே வடிவா யிருந்திடி னல்லவோ. (5)

அறிவு முற்றுப்பெற்றது.